# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 4 | இதழ்: 7 | செப்டம்பர் 2017 | வருடச் சந்தா ரூ. 100/- Volume : 4 | Issue: 7 | September 2017 | Annual Subscription Rs. 100/-





# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

“ கடந்த காலம் என்பது இல்லாத ஒன்றாக இருந்தாலும் கூட அது நடந்து முடிந்த ஒன்று; நிச்சயமான ஒன்று. ஆகவே நிச்சயமான ஒன்றோடு தொடர்பு கொண்ட பாசிட்டிவ் சிந்தனைதான் நிச்சயத்தன்மை கொண்டதாக இருக்க முடியும். எதிர்காலம் என்பது இல்லாத ஒன்று; நிச்சயமில்லாத ஒன்று. நெகட்டிவ் சிந்தனையைக் கூட பாசிட்டிவாக எடுத்துக் கொள்ளலாம். நம்மை நிதானப்படுத்த நம்முடைய நெகட்டிவ் சிந்தனைக் கூட உதவுகிறது.

- ஸ்ரீ பகவத்



# ஸ்ரீ பகவத் பவனில் அக்டோபரில் 2 நாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞான முகாம் வருகின்ற **அக்டோபர் மாதத்தில்** சேலம், ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

இடம்: **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக் காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி **(Po.)**, சேலம்-636106.

நாள்: 14.10.17 சனி முதல் 15.10.17 ஞாயிறு வரை

நேரம்: **சனி காலை 8:00 மணி முதல்**
**ஞாயிறு மதியம் 3:00 மணி வரை**

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள், வெள்ளிக்கிழமை மாலையே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

ஞானமுகாமில் கலந்து கொள்ள கட்டணம் எதுவும் இல்லை

**அனுமதி இலவசம்.**
**நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.**

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 70 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவிற்கு**

- கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை **Oct Gnanamuhaam** என்று **Type** செய்து **SMS** அனுப்ப வேண்டிய **எண்: 99422 19065**
- முன் பதிவிற்கு இறுதி நாள் 20-09-2017

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By:
**PRAKASH PRINTERS, SALEM**
Mobile : 9843786655

# புதிய வீடு

– ஸ்ரீ பகவத்



“எனது இயல்பு சரி இல்லை. எதிர்மறைச் சிந்தனைகளாகவே ஏற்படுகின்றன. எல்லாவற்றையும் நெகட்டிவாகவே பார்க்கிறேன். எனது இயல்பே இப்படிதான் உள்ளது. இயல்பை எப்படி மாற்றி அமைப்பது?”

இப்படிப் பலர் கேள்விகளை எழுப்புகின்றனர்.

இது வெறும் கேள்வியல்ல. இது அவர்கள் எதிர்கொண்டிருக்கும் பிரச்சினை.

இங்கு நாம் எவ்வாறு தீர்வு காண்பது?

நம்முடைய இயல்புகளை மாற்றி அமைக்க வேண்டுமா? எப்படி அதனை மாற்றுவது?

நம்முடைய இயல்பு என்பது நமது அடிமனமாக Subconscious – ஆக உள்ளது.

அது நமது கட்டுப்பாட்டில் இல்லாத ஒன்று. அதனால் அதனை நம்மால் ஒன்றும் செய்ய முடியாது.

அப்படியானால் என்னதான் தீர்வு?

பிரச்சினைகளுக்கான காரணம் நம்முடைய வெளிமனதுதானே தவிர அடிமனது அல்ல என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

பிரச்சினைகள் அனைத்தும் Conscious mind-ல் மட்டுமே உள்ளன. Subconscious mind-ல் இல்லை என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

வெளிமனதைப் பற்றி மேலும் சில விவரங்களைத் தெரிந்து கொள்வது, நமது பிரச்சினைகளுக்குத் தீர்வு காண உதவியாக இருக்கும்.

நினைவுக் குறிப்புகள் Memory – என்று கூறுகிறோம். பல விபரங்களையும், அனுபவங்களையும் நினைவுகளாகச் சேமித்துள்ளோம். அந்தச் சேமிப்பை மெமொரி என்று கூறுகிறோம்.

கல்லூரியில் நம்முடன் படித்த ஒருவரைச் சில வருடங்கள் கழித்துச் சந்திக்கிறோம். அவர் பெயர் மறந்து விட்டது. சில மணி நேரங்களுக்குப் பிறகு திடீரென அவர் பெயர் நினைவுக்கு வருகிறது.

அந்த நினைவு நமக்குள் எங்கேயோ பதிவாகி மறைந்திருக்கிறது. பின்பு அதுவாகவே வெளிப்பட்டு வந்திருக்கிறது.

அப்படி மறைந்திருக்கும் இடத்தை நாம் என்ன பெயரிட்டு அழைக்கலாம்? வெளிமனது என்று கூறலாமா? அல்லது நமது அடிமனது என்று கூறலாமா?

மெமொரியையும் நாம் நமது வெளி மனதின் ஒரு பகுதியாகவே கருதுகிறோம். அதனால்தான் நாம் மறந்து போன ஒரு செய்தியைக் கூட நாம் முயன்று நினைவுபடுத்திக் கொள்ள முடிகிறது.

நமது நினைவுத் தகவல்கள் அனைத்தும் ஏதோ ஒரு இருண்ட பகுதியில் சேமிக்கப்பட்டிருந்தாலும் கூட அந்த இருண்ட பகுதி நமது வெளி மனதில்தான் உள்ளது.

இனி நாம் பார்க்க வேண்டிய செய்திக்கு வருவோம்.

நாம் நமது மெமொரியைக் கொண்டு எவ்வாறு செயல்படுகிறோம்?

நாம் நமது நண்பர்களோடு தொடர்பு கொள்கிறோம்; அப்பா, அம்மாவுடன் தொடர்பு கொள்கிறோம்; நமது குழந்தைகளுடன் தொடர்பு கொள்கிறோம்.

இந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் நமது மெமொரி எப்படிச் செயல்படுகிறது?

நண்பர்களையும் பெற்றோரையும்

குழந்தைகளையும் அடையாளம் காண்பதற்கு மட்டுமா நமது மெமொரி பயன்படுகிறது?

நமது மெமொரியைக் கொண்டு நாம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான கட்டடம் கட்டியிருக்கிறோம்.

நாம் நமது நண்பரைப் பார்க்கும் போது நாம் அவருக்காகக் கட்டிய கட்டடத்தினுள் நுழைந்து விடுகிறோம்.

அந்தக் கட்டடத்தினுள் நுழைந்ததும் நமக்கு ஒருவித மகிழ்ச்சி உணர்வு ஏற்படுகிறது.

இப்படி நாம் நமக்குப் பிடித்தமானவர்களுக்கு மட்டுந்தான் கட்டடம் கட்டி வைத்திருக்கிறோமா?

நமக்குப் பிடிக்காதவர்களுக்கும் ஒரு கட்டடம் கட்டி வைத்துள்ளோம்.

அவர்களைப் பார்த்தவுடன் நாம் அந்தக் கட்டடத்தினுள் நுழைந்து கொள்கிறோம்.

கட்டடத்துக்கு ஏற்ற உணர்வுகள் நம்மிடமிருந்து வெளிப்படுகின்றன.

இவ்வாறுதான் எவற்றைப் பார்த்தாலும் நெகட்டிவாக-எதிர் மறையாகப் பார்க்கும் கட்டடத்தினுள் நாம் நுழைந்து விடுகிறோம்.

இந்தக் கட்டடமானது, நமது மெமொரி மற்றும் அனுபவங்களின் கலப்பினால் கட்டப்பட்ட ஒன்று.

இந்தக் கட்டடங்கள் அனைத்தும் நாமாக விரும்பி கட்டியவை அல்ல. நாமே நம்மையறியாமல் கட்டிக் கொண்டவை ஆகும்.

நமக்குப் பிடிக்காத சில கட்டடங்களுக்குள், நாம் சில வேளைகளில் நம்மையறியாமல் தங்கிவிட நேர்ந்து விடுகின்றது.

இந்தக் கட்டடங்கள் யாவும் நமது இயல்பினால் உருவாக்கப்பட்டவை அல்ல. அப்படி அவை நமது இயல்பின் காரணமாக உருவாக்கப்பட்டிருக்குமே - யானால் அதனை நாம் எதுவுமே செய்ய முடியாது.

இந்தக் கட்டடங்கள் யாவும் நமது மெமொரியினால் உருவாக்கப்பட்டிருக்கும் காரணத்தினால் இவற்றை எப்போது வேண்டுமானாலும் மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

நாம் ஒரு நிறுவனத்தை நடத்துகிறோம். அதற்கு நாம் ஒரு மேலாளரை நியமித்திருக்கிறோம். அவர் நம்மிடம் மிகவும் அன்பாகப் பழகுகிறார். அவர் ஒரு சாமர்த்தியமான நிர்வாகி.

நாம் ஏதாவது ஒரு பணியை மேற்கொள்ள வெளியே செல்வோமாயின் அவரையும் துணைக்கு அழைத்துச் செல்வோம். நமது எல்லா வேலைகளுக்கும் அவர் மிகவும் உதவிகரமாக இருப்பார்.

அவரைப்பற்றிய நினைவுகளைக் கொண்டு அவருக்கு ஒரு கட்டடம் கட்டி வைத்துள்ளோம். அவரைக் காணும்போதெல்லாம் நாம் அந்தக் கட்டடத்தினுள் நுழைந்து கொள்கிறோம்.

அந்தக் கட்டடம் நமக்கு ஒரு சகஜ உணர்வையும் அன்பு உணர்வையும் பாதுகாப்பு உணர்வையும் ஏற்படுத்துகின்றது.

இந்நிலையில் அவர் நமக்குத் தெரியாமல் நமது நிறுவனத்தின் பணத்தை வெளியே தெரியாத வண்ணம் சாமர்த்தியமாகக் கையாடல் செய்தது தெரிய வருகிறது. அப்படி நாம் தெரிந்து கொண்ட விபரம் எதுவும் அந்த மேலாளருக்குத் தெரியாது.

அதனால் அவர் எப்போதும் போல் நம்மிடம் சகஜமாகவே பழகுகிறார்.

ஆனால் இப்போது நமது நிலை எவ்வாறு இருக்கும்?

வெளிப் பார்வைக்கு நாம் எப்போதும் போல் நடந்து கொள்ளலாம். ஆனால் அகத்தளவில் நாம் ஓர் எச்சரிக்கை உணர்வுடனேயே இருப்போம்.

இப்போது நாம் ஏற்கெனவே அவருக்காகக் கட்டி வைத்திருந்த கட்டடம் மாறி விட்டது. புதிய கட்டடம் ஏற்பட்டு விட்டது.

அவரை இனி நாம் சந்திக்கும் போதெல்லாம் நாம் அவருக்கான புதிய கட்டடத்தினுள் தான் நுழைந்து விடுகிறோம்.

இந்தக் கட்டடத்தினுள் நாம் நுழையும் போது முன்பு போல் சகஜ உணர்வும் பாதுகாப்பு உணர்வும் ஏற்படுவதில்லை. இந்க கட்டடத்தில் அவரைப் பற்றிய எச்சரிக்கை உணர்வே ஏற்படுகிறது.

இந்த மாற்றம் எவ்வாறு நிகழ்ந்துள்ளது?

இங்கு நமது மெமொரியில் எத்ததைய மாற்றம் ஏற்பட்டுள்ளது?

நாம் நமது மெமொரியைக் கொண்டு - நினைவுகளைக் கொண்டு சில முடிவுகளுக்கு வருகிறோம். நமது முடிவுகள்தாம் நமது கட்டடங்கள் உருவாவதற்கான காரணியாக அமைந்துள்ளன.

நமது முடிவுகள் அனைத்தும் - நமது தீர்மானங்கள் அனைத்தும் மாறுதலுக்கு உட்பட்டவையே.

நமது முடிவுகளே நாம் அமைக்கும் கட்டடங்களாக உருவாகின்றன.

ஆகவே நாம் எவ்வாறு முடிவெடுக்க வேண்டும் என்பதையே புரிந்து கொள்ள வேண்டும்.

எப்படி முடிவெடுப்பது என்பதை நாம் புரிந்து கொள்வோமாயின் நமக்கு வேண்டிய நல்ல கட்டடங்களாகக் கட்டிக் கொள்ளலாம்.

நெகட்டிவ் சிந்தனைகள் ஏற்பட்டு "இப்படி ஆகிவிடுமோ?" "அப்படி ஆகிவிடுமோ?" என்று நம்மைக் கலவரப்படுத்துகின்றன என வைத்துக் கொள்வோம்.

இவற்றை நாம் எவ்வாறு எதிர் கொள்வது?

இவற்றுக்கு நாம் எத்தகைய கட்டடங்களை உருவாக்குவது?

எதிர்மறைச் சிந்தனைகளை எதிர் கொள்ள நாம் நேர்மறைச் சிந்தனைகளை – Positive சிந்தனைகளை உருவாக்க வேண்டுமா?

"நல்லதே நடக்கும். நான் நன்றாக இருப்பேன்."

– இப்படி நல்லவற்றையே எண்ணிக் கொள்வது தான் பாசிட்டிவ் சிந்தனையா? – நேர் மறைச் சிந்தனையா?

பாசிட்டிவ் சிந்தனை – நேர்மறைச் சிந்தனை நல்லது தான். அதில் எந்தச் சந்தேகமும் கிடையாது. ஆனால் அதனை எப்படிக் கையாளுவது என்பதில் தான் தெளிவில்லாமலிருக்கின்றோம்.

நமது முடிவுகள்தாம் நமக்குத் தேவையான கட்டடங்களை உருவாக்குகின்றன என்பதைப் பார்த்தோம். முடிந்து போனவற்றுக்கு முடிவு எடுக்கலாம். – முடித்துக் கொள்ளலாம். ஆனால் முடிவடையாத எதிர்கலாம் சம்பந்தமாக நிச்சயமான முடிவை எடுக்க முடியுமா?

நிச்சயமில்லாத ஒன்றுக்கு நிச்சயமான முடிவை எடுப்பது சாத்தியமில்லை.

ஆகவே எதிர்காலத்தை நோக்கிய பாசிட்டிவ் – நேர் மறைச் சிந்தனைகள் அனைத்தும் தோல்வியையே சந்திக்கின்றன.

பாசிட்டிவான சிந்தனைகள் வெற்றி பெற வேண்டுமானால் அவை யாவும் நடந்து முடிந்தவற்றோடு மட்டுமே தொடர்புடையதாக இருக்க வேண்டும். நடந்து முடிந்த கடந்த காலத்தை மட்டும் பாசிட்டிவாக – நேர்மறையாக – நன்மை புரிவதாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

எதிர்காலம் என்பது இல்லாத ஒன்று; நிச்சயமில்லாத ஒன்று.

கடந்தகாலம் என்பதும் இல்லாத ஒன்றாக இருந்தாலும் கூட அது நடந்து முடிந்த ஒன்று; நிச்சயமான ஒன்று. ஆகவே நிச்சயமான ஒன்றோடு தொடர்பு கொண்ட பாசிட்டிவ் சிந்தனைதான் நிச்சயத்தன்மை கொண்டதாக இருக்க முடியும்.

மன்னர் ஒருவர் வாள் வித்தை பயிலும் போது அவருடைய வாளே அவர் மீது பட்டு அவருடைய சுண்டு விரலைத் துண்டித்து விட்டது.

"எல்லாம் நன்மைக்கே" என அருகிலிருந்த அமைச்சர் கூறினார்.

அமைச்சரின் வார்த்தை மன்னருக்கு ஆறுதல் அளிக்காமல் அவருக்கு கோபத்தையே ஏற்படுத்தியது.

அவர் அமைச்சரைச் சிறையில் தள்ளினார்.

"இதுவும் நன்மைக்கே" எனக் கூறிய அமைச்சர் சிறைக்குச் சென்றார்.

படை வீரர்களுடன் வேட்டையாடக் கானகம் சென்ற மன்னர் படைகளை விட்டு பிரிந்து தனியே சென்று காட்டுவாசிகளிடம் மாட்டிக் கொண்டார்.

அவர்கள் அவரைக் காளிக்குப் பலி கொடுக்க முயன்றனர். பலி கொடுக்கும் தருணத்தில் அவருக்கு சுண்டு விரல் இல்லாதது அவர்களுக்குத் தெரிந்தது. ஊனமுற்றவரைப் பலியிட முடியாதெனக் கருதி அவரை விடுவித்து விட்டனர்.

ஆச்சரியமடைந்த மன்னர் அமைச்சரையும் விடுவித்தார்.

"எனக்கு சுண்டு விரல் போனது நன்மையாக முடிந்தது. ஆனால், நீங்கள் சிறையில் அடைபட்டுக் கிடந்ததில் நன்மை எதுவும் நடக்கவில்லையே?" என மன்னர் அமைச்சரிடம் கேட்டார்.

"சிறையில் அடைபடாமல் இருந்தால் நானும் உங்களுடன் வந்து காட்டுவாசிகளிடம் சிக்கியிருப்பேன். ஊனமடையாத எனது உடலையும் பலி கொடுக்க ஏற்றிருப்பார்கள். நான் சிறையில் அடைபட்டது தான் எனக்கு நன்மை".

இப்படிப் பலவிதமான கதைகள் கூறப்படுகின்றன.

பாசிட்டிவ் சிந்தனை – நடப்பது "எல்லாம் நன்மைக்கே" என நேர்மறையாகச் சிந்திப்பதால் அரசருக்கும், அமைச்சருக்கும் ஏற்பட்டது போன்ற நல்விளைவுகளே ஏற்பட்டுவிடுமோ?

பாசிட்டிவ் சிந்தனை என்பது மனோவியல் ரீதியானது.

நடந்து முடிந்த ஒன்றையோ அல்லது நடந்து கொண்டிருக்கும் ஒன்றையோ பாசிட்டிவாக எதிர் கொள்ளும்போது கடந்த காலத்தை நாம் முடிவுக்குக் கொண்டு வந்து விடுகிறோம்.

எதிர் காலத்தை சுதந்திரமாக எதிர் கொள்ளும் திறனைப் பெற்று விடுகிறோம்.

முடிந்ததையெல்லாம் முடிந்ததாக ஏற்றுக்கொள்ள இந்தப் பாசிட்டிவ் சிந்தனை உதவுகிறது.

இதன் மூலம் நாம் நமது கட்டடங்ளையெல்லாம் நமது தேவைக்கேற்ப மாற்றிவடிவமைத்துக் கொள்ளலாம்.

நெகட்டிவ் சிந்தனையை கூட பாசிட்டிவாக எடுத்துக் கொள்ளலாம்.

நம்மை நிதானப்படுத்த நம்முடைய நெகட்டிவ் சிந்தனை கூட உதவுகிறது.





V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880



# கேள்வி? பதில்...



## அதிகப்படியான காம உணர்ச்சியிலிருந்தும் அதனால் ஏற்படும் குற்ற உணர்விலிருந்தும் எவ்வாறு விடுபடுவது?

**கேள்வி:** ஞானத் தெளிவு பெற்ற ஒருவருக்கு பழைய பாதித்த மன அனுபவங்களின் தாக்கம் குறைந்துவிடும் என்றும் தீய பழக்கங்களின் ஆதிக்கத்திலிருந்தும் குற்ற உணர்விலிருந்தும் விடுபடுவார்கள் என்றும் கூறுகிறார்கள். எனக்கு உள்ள அதிகபடியான காம உணர்ச்சியால் ஏற்படும் தீய பழக்கங்களில் இருந்தும் அதனால் ஏற்படும் குற்ற உணர்விலிருந்தும் எவ்வாறு விடுபடுவது?

**பதில்:** புரிதலினால் ஓர் அன்பருக்கு ஏற்பட்ட நடைமுறை மாற்றத்தையே உதாரணமாக பார்ப்போம். இனி அவர் கூறியது:

"என்னுடைய சிறு வயதிலேயே எனக்கு காம உணர்வில் அதீத ஆர்வம் இருந்தது. எனக்கு ஏன் அப்படி ஆர்வம் இருந்தது என்று தெரியவில்லை. என் வாழ்க்கையில் நான் பார்த்த, பாதித்த, ஈடுபட்ட சில நிகழ்வுகள் என பலவும் சேர்ந்து ஒரு தொகுப்பாக உள்ளன. உறவு முறையில் மதிக்கப் பட வேண்டியவர்கள், பெரியவர்கள், சிறியவர்கள் என பலரின் மேல் முறையற்ற காம உணர்வு ஏற்படும். இப்படி ஏற்படுவதால் நான் என்னையே மிகவும் ஒரு கேவலமான, அற்பப் பிறவியாக எண்ணிக் கொள்வேன். கடையனுக்கும் கடையனாகவும், இருப்பதிலேயே மிகவும் மோசமான நபராகவும் என்னை எண்ணிக்கொள்வேன்...

"இப்படி ஏற்படும் அதீத காம உணர்வினால் நான் மட்டும் தனிமையில் இருக்கும் சூழ்நிலையிலும் என்னை யாரும் கவனிக்கவில்லை என்ற சூழ்நிலையின் போதுதெல்லாம் நான் பார்த்த, சந்தித்த, ஈடுபட்டு நிகழ்வுகளின் மன பாதிப்புகள் ஒன்றின்பின் ஒன்றாக மனதில் படமாக ஓடத்துவங்கும். பிறகு உடலில் உணர்ச்சிகளைத் தூண்டி சுய இன்பம் என்ற செயலில் போய் முடியும். சுய இன்பத்திற்கு பிறகு ஏற்படும் குற்ற உணர்வின் கோரப்பிடியில் இருந்து விடுபடுவதற்கு பல மணிநேரம், பல நாட்கள் கூட ஆகும். நான் ஒரு நாளும் உருப்படப் போவதில்லை என்று நினைத்து கொள்வேன்...

"என்னை தவிர மற்றவர்கள் அனைவரும் மிகவும் நன்றாக இருப்பது போல் எனக்கு தோன்றும். நான் எல்லோருடனும் சேர்ந்து இருக்கும் போது நன்றாக இருபதுபோல் இருப்பேன். நான் மட்டும் தனித்து இருக்கும் போது காம எண்ணத்தின் கோரப்பிடியில் மட்டும் தான் இருப்பேன்...

''மேற் கூறியவற்றில் இருந்து விடுபடுவதற்காகவும் மனதில் எப்போதும் நல்ல எண்ணமும், தியானத்தின் மூலம் தீய பழக்கத்தில் இருந்து விடுபடவும், மன ஓர்மைபாடு ஏற்பட வேண்டும் என்றும் ஆன்மிகத்திற்கு வந்தேன். ஆன்மிகத்தில் எத்தனை பயிற்சி முயற்சிகள் உண்டோ அத்தனையும் முயன்று பார்த்தேன். என்னுடைய பிரச்சினைக்கு ஒரே தீர்வு ஆன்மிகத்தில் மட்டும் தான் கிடைக்கும் என்று நம்பினேன். பயிற்சி தொடக்கத்தில் கொஞ்சம் நன்றாக இருக்கும். நாட்கள் போகப் போக தோல்வியே ஏற்பட்டது. என்னுடைய பிரச்சினைக்கான தீர்வை வாய் விட்டு கேட்க முடியாத ஒரு நிலையில் தான் பகவத் அய்யாவை சந்தித்தேன்...

"எண்ணம் (Thought), சிந்தித்தல் (Thinking) என்றால் என்ன என்பதை தெளிவாக புரிந்து கொண்டேன். தானாக வருவது எண்ணம் (Thought), வந்த எண்ணத்தின் மீது நமது பங்களிப்பின் நீடிப்பே சிந்தித்தல் (Thinking) என்பது தெளிவாக புரிந்தது. **"தீய பழங்கங்களை விட முடியுமா?"** என்ற புத்தகத்தை படித்தேன். குற்ற உணர்வு கூட ஓர் எண்ணம்தான் என்பது புரிந்தது...

"நான் புரிந்து கொண்டவற்றை என்னுடைய நடைமுறை வாழ்வில் எப்படி பொருத்திப் பார்த்து புரிந்து கொண்டேன் என்பதை கூறுகிறேன்...

"தாமாக ஏற்படுகின்ற காம எண்ணத்திற்கு நான் எந்த வகையிலும் பொறுப்பு ஏற்கத் தேவையில்லை என்பதை புரிந்து கொண்ட போது தலையில் சுமந்து கொண்டு இருந்த என்னுடைய பிரச்சினையை சற்றே கீழே இறக்கி வைத்தாற்போல் இருந்தது. மனதின் கவனமே இல்லாமல் Unconscious ஆக சிந்திப்பதும் செயல்படுவதும் கூட ஓர் எண்ணம் என்று எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதை புரிந்து கொள்ளும் போது மனதின் இறுக்கம் மேலும் தளர்வதை உணந்தேன். குற்ற உணர்வும் கூட ஓர் எண்ணம் என்பது புரிந்த போது குற்ற உணர்வு நீடிக்கும் நேரம் படிப்படியாகக் குறையத் தொடங்கியது...

"தீய பழக்கத்தை நான்கு பகுதிகளாக பிரித்து கொண்டேன். 1) தாமாக ஏற்படும் எண்ணம், 2) வந்த எண்ணத்தை நாமாக சிந்திப்பது, 3) செயல்படுவது (சுய இன்பமாக) 4) செயலுக்கு பிறகு ஏற்படும் குற்ற உணர்வு என்று நான்கும் ஒன்றின்பின் ஒன்றாக சங்கிலி தொடர் போல் சுழற்வதை உணர்ந்தேன்...

"இந்த நான்கு பகுதிகளில் தாமாக ஏற்படுகின்ற எண்ணமும், செயலுக்கு பிறகு ஏற்படும் குற்ற உணர்வும் எண்ணம் என்ற தகுதிக்கு வந்துவிடுகிறது. இந்த இரண்டு

பகுதிகளிலும் நமக்கு எந்த வேலையும் இல்லை என்பது முதலில் நன்றாக புரிந்து விட்டது. சிந்தித்தல், செயல்படுதல் என்ற இரண்டு பகுதிகளில் மட்டுமே நமது பங்களிப்பு உள்ளது என்பதும் தெளிவாக புரிந்தது. மனதில் கவனமே இல்லாமல் சிந்தித்தாலும் செயல்பட்டாலும் அதையும் கூட எண்ணமாக எடுத்து கொள்ள வேண்டும் என்பதை புரிந்து கொள்ளும் போது அந்த பகுதியிலும் நாம் பொறுப்பு ஏற்பதிலிருந்து விடுபடுகிறோம். மனதின் கவனத்திற்கு வந்த பிறகு சிந்திப்பது செயல்படுவது என்ற இரண்டு பகுதிகளில் மட்டும்தான் நமது பங்களிப்பு உள்ளது என்பதும் தெளிவாக விளங்கியது...

"சில நேரங்களில் நமது கவனத்திற்கு தெரிந்தும் கூட சிந்திப்பதும் செயல்படுவதும் பழைய பழக்கத்தின் அழுத்தம் காரணமாகவும், நமது கட்டுபடுத்த முடியாத மன விருப்பத்தின் காரணமாகவும் ஏற்படுவது உண்டு. அப்படி நமக்கு தெரிந்தும் கட்டுபடுத்த முடியாத சிந்தித்தலும் செயலும் கூட நம்மை மீறி நடந்த ஒன்றாக எடுத்துகொள்ள வேண்டும் என்ற முடிவுக்கு நான் வந்துவிட்டேன்...

"இதனால் நானாக வழியே எண்ணத்தின் பின் சென்று சிந்திப்பது படிப்படியாக குறைந்தது. கவனத்துடன் சிந்திக்கும் நேரத்தின் அளவும் குறைந்தது. செயலில் (சுய இன்பத்தில்) ஈடுபட்டாலும் அதனல் ஏற்பட்ட குற்ற உணர்வு நீடிக்கவில்லை. நானாக சிந்திப்பதிலும் செயல்படுவதிலும் இருந்து வந்த கால நேரம் குறைந்து கொண்டே வந்தது...

"இந்த புரிதலுக்கு முன்பு வரை எனக்கு ஏற்படும் எல்லா எண்ண உணர்வுகளுக்கும் நான் மட்டும்தான் பொறுப்பு என நினைத்து கொள்வேன். எண்ணம், சிந்தித்தல், செயல், செயலுக்கு பிறகு ஏற்படும் குற்ற உணர்வு என்ற நான்கு பகுதிகளில் ஒரே தொகுப்பாக தொடர் நிகழ்வாகதான் இருந்தது. எண்ணத்தை தொடர்ந்து சிந்தித்தல், சிந்தித்தலை தொடர்ந்து செயல், செயலுக்கு பிறகு முடிந்த செயலுக்காக பல மணிநேரம் குற்ற உணர்வு கொள்வது பிறகு மீண்டும் பழைய படி அதே எண்ணம் சிந்திப்பு செயல் என்று செக்குமாடு ஒரே இடத்தை சுற்றி சுற்றி வருவதை போல் இந்த நான்கு பகுதிகளிலேயே தொடர்ந்து சுற்றி கொண்டே இருந்தேன். மேலும் இந்த **'தீய பழக்கத்தில் ஈடுபட்டு விட்டேனே' என்ற குற்ற உணர்வின் தீவிரம் தான் அடுத்து தோன்றுகிற எண்ணம், சிந்திப்பு, செயல் என்ற தொடருக்கான மறைமுகமான தூண்டுதல் என்பதும் புரிந்தது...**

**"நடந்து முடிந்த செயலை முடிந்த ஒன்றாக எடுத்துக் கொண்டபோது குற்ற உணர்வின் ஆதிக்கம் மறைந்து விட்டது...**

''புரிதலுக்கு பிறகு நான்கு பகுதிகளுக்கு இடையேயும் ஓர் இடைவெளி உள்ளது என்பது தெளிவாக தெரிந்தது...

"எண்ணம், சிந்தனை, செயல், குற்ற உணர்வு என்பதை தனித்தனியாக பிரித்து தெளிவாக விளங்கிகொள்ளும் போதுதான், அதில் நமது கட்டுப்பாட்டில் உள்ள பகுதி எது, கட்டுபாட்டில் இல்லாத பகுதி எது என்பதை புரிந்து கொள்ள முடிந்தது.

இந்த நான்கு பகுதிகளில் மனதின் கவனத்திற்கு வந்த பிறகு நாமாக சிந்திப்பதிலும் செயல்படுவதிலும் மட்டும் நாம் கொஞ்சம் நிதானமாக செயல்பட்டால் போதும். மற்ற எந்த பகுதியிலும் நமக்கு எந்த வேலையும் இல்லை என்பது புரிந்துவிட்டது...

''பொதுவாக நாம் எதற்காவது பொறுப்பு எடுத்தால்தான் அதற்காக செயல்பட வேண்டிய அவசியம் ஏற்படும். பொறுப்பு ஏற்க வேண்டிய அவசியம் இல்லை என்பது புரிந்து கொண்டதால் காலப்போக்கில் அதற்கான செயல் தேலைப்படாமலேயே போய் விட்டது. சில மாதங்கள் கழித்து என் மன பாதிப்பிற்கு காரணமானவர்களை சந்திக்கும் போதுதான் "அட! நாமா இத்தனை நாட்கள் இந்த மன அனுபவத்தை பற்றி கொஞ்சமும் நினைக்காமல் இருந்து விட்டோம்" என்பது என் நினைவுக்கு தெரிந்தது...

நமக்கு நேரடியாக தெரிந்து ஒரு போதும் மாற்றம் ஏற்பட போவதில்லை. நமக்கு தெரியாத போது மட்டும் தான் மாற்றமே ஏற்பட முடியும். நமக்கு தோன்றும் எண்ணத்திற்கு பொறுப்பு ஏற்காத போது அதற்கான செயலும் ஏற்பட வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. இதற்கு பிறகு நானே வழியே சென்று பழைய அனுபவத்தை பற்றி பிடிக்க முயன்றாலும், என்னால் பற்றி பிடிக்கவே முடியவில்லை. பழைய பாதித்த மன அனுபவங்களின் பிடியிலிருந்தும் தீய பழக்கங்களின் ஆதிக்கத்திலிருந்தும் குற்ற உணர்விலிருந்தும் விடுபட்டு விட்டேன் என்பது புரிந்தது. இது உள்ளபடியே எனக்கு ஆச்சரியமாகத் தான் இருந்தது! அதீத காம உணர்விலிருந்து தேவைக்கு ஏற்ப பயன்படித்திக் கொள்ளும் தகுதிக்கு நான் எனக்கு தெரியாமலே வந்துவிட்டேன்.

"புரிதலுக்கு முன்பு வரை மன அனுபவங்களுக்கு காரணமானவர்களை சந்திப்பதையும் அவர்களுடன் பேசுவதை பெரும்பாலும் தவிர்த்து வந்தேன். இப்போதெல்லாம் அவர்களுடன் நன்றாக பேச முடிகிறது. நல்ல நண்பர்களாக இருக்க முடிகிறது. அவர்களுக்கு தேவையான உதவிகளை கூட செய்யமுடிகிறது...

"வாழ்க்கையை நிறைவாக வாழ்வதற்கு காம உணர்வும் தேவையான ஒன்றுதான். அதீத காம உணர்விலிருந்து விடுபட்டு நிதானத்துடன் செயல்படும் தகுதிக்கு வந்து விட்டால் மட்டும் போதும் என்பதை புரிந்து கொண்டேன்."

## ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் மதுரை வருகை

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஒவ்வொரு மாதத்திலும் இறுதி பத்து நாட்கள் மதுரை, திருப்பரங்குன்றம், லைன் சிட்டி நகரில் உள்ள தனது இல்லத்தில் தங்கி இருப்பார்கள். அது சமயம் ஐயாவை சந்திக்க விரும்புபவர்கள் முன்அனுமதி பெற்று ஐயாவை நேரில் சந்திக்கலாம்.

முன் அனுமதிக்கு : 99442 15677, 97891 65555, 99942 05880



# ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் புதிய நூல்
# 'பொது அமைதி'

இப் புதிய நூல் விரைவில் வெளிவர உள்ளது. அக விடுதலைக்காகப் பல நூல்களை எழுதிய ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் புற ஒழுங்குக்காகவும் சமுதாய நலனுக்காகவும் எழுதிய நூல் தான் **பொது அமைதி** எனும் இந்தப் புதிய நூல்.

சமுதாய அவலங்களைப் படம் பிடித்துக் காட்டும் இந்நூல், அவற்றுக்கான தீர்வையும் வழங்குகிறது.

இந்தச் சமுதாயத்தில் பல அவலங்கள் நடந்து வருகின்றன. அநீதியாலும் அதிகார வர்க்கத்தாலும் பல வகையிலும் பாதிப்படைந்து வருகிறோம்.

ஆனால் அதற்கான எதிர்ப்பை தனிமனிதனாகக் காட்ட முடியாத சூழல். ஒரு சிலர் எதிர்ப்பைக் காட்டினாலும் அது வன்முறையில் சென்று முடிகிறது.

பிறகு எப்படித் தான் தீர்வு காண்பது? நம்மால் என்னதான் செய்து விட முடியும்?

இப்படி நமக்கு ஏற்படும் பாதிப்பையே, அந்த பாதிப்பினால் ஏற்படும் உந்து சக்தியாகப் பயன்படுத்தி நம்முடைய சமூக அமைப்பையே மாற்றியமைக்கும் சமுதாய மாற்றத்திற்கான தீர்வை வழங்குகிறது இந்நூல்.

சமுதாய நலனுக்காக வெளிவர இருக்கின்ற இந்நூலை குறைந்த விலையில் எல்லோருக்கும் கொண்டு சேர்க்க ரூபாய் 10000/– வழங்கும் இருபது நன்கொடையாளர்கள் தேவைப்படுகிறார்கள்.

ஆர்வமுள்ளவர்கள் இச் சமுதாயத் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

**"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் **97891 65555** என்ற எண்ணிற்கு தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

அன்புடன்




# ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவனின் செயல்பாடுகள் மிகச் சிறப்பாக நடை பெற்று வருகிறது. ஐயாவை சந்தித்து உரையாடி தெளிவு பெற பலரும் வந்த வண்ணம் உள்ளனர். வருபவர்கள் தங்குவதற்கான வசதியும் அவர்களுக்கான உணவும் சிறந்த முறையில் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. மேலும் ஒவ்வொரு மாதமும் ஞான முகாம் கட்டணமின்றி இலவசமாக நடந்து வருகிறது. ஸ்ரீபகவத் மிஷனுக்கு வரும் நன்கொடைகளையும் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களின் பங்களிப்பையும் கொண்டு மட்டுமே அனைத்து செலவுகளையும் எதிர் கொண்டு வருகிறோம். அந்த வகையில் நன்கொடைகளை வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாக இணைந்து கொண்ட நமது அன்பர்கள்

செல்வி. **V.ஜமுனா,** தி.நகர், சென்னை, திரு. **உதயவர்மன்** தம்பதியர், கனடா, திரு. **இராஜமாணிக்கம்,** சேலம்,

இவர்களோடு தங்கள் பெயரை தெரிவிக்க விரும்பாத சென்னை தம்பதியர் ஆகிய அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பகவத் ஐயாவின் கருத்துகளை புரிந்து கொண்டவர்களும் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாகவும் புரவலர்களாகவும் இணைந்து ஸ்ரீபகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு





**K.S. ஜீவமணி**
செல் : 97891-65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

பகவத் பாதையில் நம் பயணத்தின் நோக்கமே ஞானத்தை அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்பதே. ஆன்மிக வாழ்வுக்கு மட்டுமல்லாது உலகியல் வாழ்வுக்கும் மிக முக்கியமானது விடுதலை என்ற முக்தியே. அந்த முக்தியை கொடுக்கும் புரிதலைத்தான் மெய்ஞானம் என்று கூறுகிறோம்.

ஆன்மிக தேடுதலில் உள்ள பலரும் ஞானம் என்றால் என்ன என்று தெரியாமலேயே ஞானத்தைத் தேடி கொண்டிருக்கிறார்கள். சென்று அடைய வேண்டிய இடம் எது என்று தெரியாமலேயே அதற்கான வழியைத் தேடுவது போன்றது தான் இது. பலரும் ஞானத்தையும் முக்தியையும் சக்தி நிலைகளோடும் அமானுஷ்யத்தோடும் இணைத்தே கற்பனைகளையும் கருத்துகளையும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஞானி என்றால் 'முக்காலமும் உணர்ந்தவர்; அமானுஷ்ய சக்திகள் நிறைந்தவர் மற்றவர்களின் மன ஓட்டத்தை அறியக் கூடியவர்' என பல கற்பனைகளை கொண்டுள்ளனர். மேலும் ஞானி என்றால் 'எல்லா ஆசைகளையும் துறந்த பற்றற்றவர்' என எண்ணிக் கொண்டுள்ளனர்.

உண்மையில் முக்தி; விடுதலை என்பது இயற்கையானது சர்வ சாதாரணமானது. அது நாம் அடைய வேண்டிய இடமே அல்ல. அது ஏற்கனவே இயற்கையாக இயங்கிக் கொண்டிருக்க கூடிய விடுதலை இயக்கம். அதனை அடைய வேண்டும் என்று முயற்சி செய்து அதனோடு முரண்படுவதே அஞ்ஞானம். அந்த முரண்பாட்டில் இருந்து விடுபட உதவும் புரிதலே ஞானம்.

ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் புறத்தில் எந்த வேறுபாடும் இல்லை. உண்மையில் அஞ்ஞானி சாதாரணமானவர் என்றால் ஞானி அவரைவிட சர்வசாதாரணமானவர்.

ஓர் அஞ்ஞானிக்கு வரும் ஆசை, கோபம், பயம், விருப்பு – வெறுப்பு போன்ற அனைத்து உணர்வுகளும் ஞானிக்கும் ஏற்படும். புரிதல் இல்லாத புதிய அன்பர்கள் இதனை படிக்க நேரிடும்போது, பிறகு எதற்கு இந்த ஞானம், எதற்கு இந்த முக்தி என்று எண்ணத் தோன்றும்.

உண்மையில் ஞானம், முக்தி என்பது அகம் சார்ந்தது. அஞ்ஞானி அகத்தில் தனக்கு ஏற்படும் இன்பத் துன்ப உணர்வுகளோடு பந்தப்பட்டு முரண்பட்டு போராடிக் கொண்டிருப்பான். ஞானி தன் அக உணர்வுகளோடு பந்தப்படாமல் அதனை தேவைக்கேற்ப புறத்தில் பயன்படுத்திக் கொள்வான். ஞானியின் செயல் அனைத்தும் புறம் சார்ந்தது மட்டுமே, அஞ்ஞானியின் செயல் அனைத்தும் அகமும் புறமும் கலந்தது. அஞ்ஞானி தன் அகத்தை நிர்வாகம் செய்ய முயற்சி செய்வான். ஞானி தன் அகத்தில் செய்வதற்கு எதுவுமில்லை என்று இயற்கையான அக இயக்கத்திற்கு இடையூறு இல்லாமல் அதிலிருந்து விடுபட்டிருப்பான்.

பக்தியின் மூலமும் முக்தியை பெறலாம்; ஞானத்தின் மூலமும் முக்தியை பெறலாம்.

இவ்விரண்டுமே விடுதலையைக் கொடுக்கும். ஆனால் பக்தியில் சரணாகதி அளவுக்கு உயரவேண்டும். அதற்கு எந்த சந்தேகமும் இல்லாத பரிபூரண நம்பிக்கையும் விசுவாசமும் வேண்டும். தற்போதைய விஞ்ஞான காலத்தில் இது அனைவருக்கும் சாத்தியமில்லை.

ஞானம் என்ற புரிதலின் மூலம் விடுதலை என்பது அனைவருக்கும் சாத்தியம். ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் ஞானத்தை விஞ்ஞானமாக்கியதால் (Science) பள்ளி மாணவனால் கூட விடுதலையை எளிதில் பெற முடியும்.

இங்கு புரிதலுக்கு நம்பிக்கை தேவையில்லை மனதின் இயற்கையான இயக்கத்தை புரிந்து கொள்ளும் அறிவு இருந்தால் மட்டும் போதும். முக்தி – விடுதலை என்பது அனைவருக்கும் சாத்தியம்.

ஞானமும் விடுதலையும் மனித குலத்திற்கு மிகவும் அத்தியாவசியமானது. அத்தியாவசியமானது சாத்தியமாக இருக்கும் பட்சத்தில் அனைவருக்கும் எடுத்துச் செல்வது மிகவும் எளிது, நாம் செய்ய வேண்டுவதெல்லாம் அதற்கான செயலில் ஈடுபட வேண்டும் என்பதே. அந்த வகையில் ஆடிப்பெருக்கை முன்னிட்டு சேலம், மேட்டூரில் மக்கள் திரளாக வந்து செல்லும் இடத்தில் ஐயாவின் நூல்கள் விற்பனைக்கும் ஞானமுகாம் விபரத்தை தெரிவிக்கும் பேனரும் வைக்கப்பட்டன. இதனை ஏற்பாடு செய்து நமது மேட்டூர் அன்பர் திரு. **சங்கர்** அவர்களுக்கும் அவரது நண்பர் திரு. **கலைமணி** தம்பதியர் அவர்களுக்கும் பாராட்டுகளை தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் சுதந்திர தினத்தை முன்னிட்டு ஆகஸ்ட் 15–ஆம் தேதி அன்று சேலம் ஸ்ரீ வித்தியாமந்திர் கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் கொடி ஏற்றத்திற்காக நம்மை அழைத்திருந்தனர். இந்த வாய்ப்பினை பயன்படுத்தி **"அகச் சுதந்திரத்திற்காக ஞானம்"** என்ற தலைப்பில் ஓர் உரையாற்றி ஐயாவின் ஞானத்திறவுகோல் நூலான **சிந்தனையும் சிந்திப்பும்**

என்ற நூலினை 500 மாணவ மாணவிகளுக்கும் ஆசிரியர்களுக்கும் இலவசமாக கொடுக்கப்பட்டது. வருகின்ற வாய்ப்பினை சரியாக பயன்படுத்தி அனைவருக்கும் எடுத்துச் செல்வதை நமது கடமையாக கொள்வோம்.

**புரிந்தவர்கள் அனைவரும் ஒன்று கூடுவோம்! உலகிற்கு இவ்வுண்மையைக் கொண்டு சேர்ப்போம்!**

அனைவரின் ஒத்துழைப்போடு வருகின்ற 2018 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் சென்னையில் மாபெரும் ஒருநாள் ஞான கருத்தரங்கு நடத்த எண்ணியுள்ளோம்.

**அனைவருக்கும் ஞானத்தை கொண்டு சேர்ப்பது இயற்கையின் திட்டமாக இருக்க, நாம் அனைவரும் ஒன்றிணைந்து இயற்கையின் கருவியாக இருந்து செயல்படுவோமாக.**

# ஸ்ரீ பகவத் பவன் – புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்,

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும் கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் **புரவலர்** குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ.1000 முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ.12000 முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று புரவலர்களாக இணைந்தவர்கள் :

1. திரு. **சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
2. திரு. **வீரன்சுப்பு (ஏ) இராஜேஸ்,** புதுக்கோட்டை.
3. திரு. **கணேஷ்,** கோவை.
4. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை,
5. திரு. **இரகு,** கிருஷ்ணகிரி.
6. திரு. அஃகு ஹீலர். **உமர் ஃபாரூக்,** கம்பம்.
7. திரு. **சேகர்,** கத்தார்.
8. திரு. **குணாலன்,** கோவை .
9. திரு. **சம்பத்,** சென்னை.
10. திரு. **வெங்கட்ராமன்,** சென்னை.
11. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
12. திரு. **பாலசுப்ரமணி,** பரமத்தி வேலூர்.
13. திரு. **பாரதிராஜா,** பரமத்தி வேலூர்.
14. திரு. **பாபுலால்,** பெங்களூர்.
15. திரு. **முரளி,** சென்னை.
16. திரு. **வீரப்பன்,** நெல்லை.
17. திரு. **அருணாச்சலம்,** நெல்லை.
18. திருமதி. **நிருபமா ஸ்ரீநாத்,** சென்னை.
19. திருமதி. **வடிவம்மாள்,** சென்னை.
20. திரு. ஹீலர். **சுரேஷ்,** சென்னை.
21. திரு. **ஹரி கிருஷ்ணன்,** சென்னை.
22. திரு. **இரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பலம், சென்னை.
23. திரு. **பாலமுருகன்,** USA.
24. திருமதி. **சுரபி,** டெல்லி.
25. திரு. **முருகவேல்** சென்னை.
26. திரு. **ஸ்ரீபகவத்மிஷன்,**வெஸ்ட்மாம்பலம் சத்சங்கம்.
27. திரு. **கார்த்திக்,** போரூர், சென்னை.
28. திரு. **ஆனந்த் V.ராயன்,** திருச்செந்தூர்.
29. திரு. **யுகேஷ்குமார்,** சென்னை.
30. திரு. **P.சௌந்தரராஜன்** சென்னை.
31. திரு. **D.சந்திரசேகர்,** சென்னை.
32. திரு. **நத்தகோபால் நாராயணன்,** USA.
33. திரு. **பாபு,** காட்பாடி, வேலூர்.
34. திரு. **K.முருகானந்தன்,** திருப்பூர்.
35. திரு. **P.R. குமார்,** எர்ணாகுளம்.
36. திருமதி. **மாலா மங்களேஸ்வரன்,** லண்டன்.
37. திரு. **செந்தில் ஜெயபாலன்,** பெங்களூரு.
38. திரு. **Javis Arul Jerald Arul Samy, Dubai.**
39. திரு. **பாண்டி பரமசிவம்,** சென்னை.
40. திரு. **T.M.K. தியாகராஜன்,** சென்னை.
41. திரு. **A.ராஜமாணிக்கம், (MRS Yarns)** சேலம்.

புரவலர்களாக தங்களை இணைத்துக் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம். வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 Car Street Branch, Salem. என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை 97891 65555 என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ வித்யாமந்திர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி மாணவர்களுக்கு சிந்தனையும் சிந்திப்பும் நூல் வழங்கிய போது



மேட்டூரில் ஆடிப் பெருக்கு அன்று
நமது புத்தக ஸ்டால்



ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவுடன்
திரு. மனோகர் ராஜா அவர்கள்



ஞாயிறு Google Hangouts சத்சங்கத்தில்
ஐயாவுடன் திரு. முரளி அவர்கள்



ஸ்ரீ வித்யாமந்திர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி
மாணவர்களுக்கு உரையாற்றும் போது



ஐயாவுடன் சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் தலைவர்
திரு. ரவிச்சந்திரன் மற்றும் திரு. தியாகராஜன் அவர்கள்



ஸ்ரீ பகவத் பவனில் ஞாயிறு சத்சங்கத்தில்...

# ஜென் கதை

## ஞானத்திற்கு முன்னும் பின்னும்

குடும்பஸ்தன் ஒருவன் தன் தொழிலுக்கு இடையில் ஞானத்தை அடைவதற்காக அனைத்து பயிற்சி முயற்சிகளையும் செய்து வந்தான். தான் ஞானமடைந்து விட்டால் நடப்பவை அனைத்தையும் முன் கூட்டியே அறியும் ஆற்றல் தனக்கு வந்துவிடும் என எண்ணி வந்தான். பிறப்புக்கு முன் இறப்புக்கு பின் உள்ள இரகசியங்கள் தெரிந்து கொள்ள முடியும் என நம்பி வந்தான். ஞான தேடுதலுக்கு இடையில் குடும்பத்தை நிர்வகிப்பது அவனுக்கு மிகவும் சிரமமாக இருந்தது.

இந்நிலையில் ஞானி ஒருவர் பலருக்கும் ஞானத்தை வழங்கி வருவதாக அறிந்தான். அவரை தேடி தானும் ஞானத்தைப் பெற புறப்பட்டான். பல மைல் தூரம் கரடு முரடான வறட்சிப் பாதைகளை கடந்து அவர் இருப்பிடம் சென்று அடைந்தான். வழி நெடுக அவன் கண்ட வறட்சிக்கு நடுவில் அவரது தோட்டம் பழ மரங்கள் நிறைந்த பறவைகள் வந்து செல்லும் பசுமையான இடமாக இருந்தது. முற்றிலும் வறட்சிக்கு நடுவில் அவரது இருப்பிடம் பசுமையாக இருப்பது ஆச்சரியமாக இருந்தது. தோட்டத்தினுள் சென்ற அவன் அங்கு வயது முதிர்ந்த தோட்டக்காரர் ஒருவர் கிணற்றில் இருந்து தண்ணீர் எடுத்து செடிகளுக்கு ஊற்றி கொண்டிருந்தை கண்டான். அவரிடம் இவன், “குருவை காண வேண்டும், குரு எங்கே இருக்கிறார்?” என்றான்.

“குடில் உள்ளே சென்று அமருங்கள்,” என்றார் தோட்டக்காரர். அவன் உள்ளே சென்று கண் மூடி தியானத்தில் அமர்ந்தான். சிறிது நேரத்தில் அந்த தோட்டகாரர் அவன் அருகில் வந்து அமர்ந்தார்.

“சொல்லப்பா உனக்கு என்ன வேண்டும்?” என்றார்

“நீங்கள்தான் அந்த குருவா!” என மிகவும் வியப்படைந்தான். அவனது கற்பனைகள் அனைத்தும் தவிடுபொடியாகியது.

“ஆமாப்பா நான்தான் இங்கே வருபவர்களுக்கு ஞானத்தை வழங்கி வருகிறேன்” என்றார்.

அவரின் எளிமையான தோற்றமும் பேச்சும் அவன் இதுவரை ஞானியைப் பற்றி கொண்டிருந்த அத்தனை அடையாளங்களும் தகர்ந்தன. அவனது எதிர்பார்ப்பிலிருந்து முற்றிலும் வேறுபட்டு இருந்ததால் மிகுந்த ஏமாற்றமடைந்தான். சோர்ந்து போன அவன் முகத்தைப் பார்த்து, “உனக்கு என்ன தெரிய வேண்டும்?” என்றார்.

“ஞானம் அடைந்து விட்டால் முக்காலமும் உணரும் சக்தியும், பிறப்பு இறப்பின் இரகசியமும் தெரிந்துவிடாதா?” என்றான்.

‘‘தெரியாது இதற்கும் ஞானத்திற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது, நீ கேட்பது யோக சக்தி நிலைகளைப் பற்றி. அது பற்றி எனக்கு எதுவும் தெரியாது,” என்றார்.

“அப்படி என்றால் சக்தி நிலைகள் வேறு, ஞானம் வேறா?” என்றான்.

“ஆமாம்” என்றார்.

“நீங்கள் ஞானம் பெற்ற பிறகு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?” என்றான்.

‘‘நான் எப்போதும் செய்துகொண்டிருக்கும் தோட்டத்தை பராமரிப்பதும் செடிகளுக்கு நீர் ஊற்றுவதும்” என்றார்.

‘‘ஞானம் பெறுவதற்கு முன் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்’’ என்றான். ‘‘நான் எப்போதும் செய்துகொண்டிருக்கும் தோட்டத்தை பராமரிப்பதும் செடிகளுக்கு நீர் ஊற்றுவதும்” என்றார்.

“அப்படி என்றால் ஞானம் பெற்றதால் எந்த மாற்றமும் இல்லையா!” என்றான் ஆச்சரியமாக

“நிறைய மாற்றங்கள் இருக்கிறது” என்றார்.

“நீங்கள் கூறுவது ஒன்றுமே புரியவில்லையே” என்றான்.

“ஞானத்தெளிவுக்கு முன் நான் எப்போதும் செய்து கொண்டிருக்கும் தோட்டத்தை பராமரிப்பதும் செடிகளுக்கு நீர் ஊற்றுவதோடு எனது மனதையும் பராமரிக்கும் முயற்சியில் ஈடுபட்டு வந்தேன். ஞானத் தெளிவிற்கு பிறகு மனதை பராமரிக்கும் முயற்சியை முழுவதும் கை விட்டுவிட்டு முழு நேரப் பணியாக தோட்டத்தை பராமரிப்பதையும் செடிகளுக்கு நீர் ஊற்றுவதையும் செய்து வருகிறேன்” என்றார்.

‘‘அப்படி என்றால் இரண்டுக்கும் உள்ள வேறுபாடுதான் என்ன?” என்றான்.

“ஞானத்தெளிவுக்கு முன்பு மனத்தை பராமரிக்கும் முயற்சிக்கு நேரம் போக மீதி நேரத்தில் தோட்டத்தை பராமரித்து வந்தேன். ஞானத்தெளிவுக்கு பிறகு சுதந்திரமாக இயங்கும் மனத்தை பராமரிக்கத் தேவையில்லை என்பதைப் புரிந்துகொண்டு முழு நேரப் பணியாக தோட்டத்தை பராமரித்து வருகிறேன்” என்றார்.

மனத்தை பராமரிக்க தேவையில்லை என்பதை புரிந்து கொள்வதே ஞானம்; மனத்தை பராமரிக்கும் முயற்சியிலிருந்து விடுபடுவதே விடுதலை என்பதையும் புரிந்து கொண்டான்.

அவரது முழு முயற்சியால் மட்டுமே இவ்வளவு வறட்சியான பகுதிக்கு நடுவே பசுமையான தோட்டத்தை உருவாக்கியுள்ளார் என்பதையும் தெரிந்து கொண்டான்.

மனதை சுதந்திரமாக விட்டுவிட்டு புறத்தில் செயல்படுவது ஒன்றே உயர்வுக்கான வழி என்பதை உணர்ந்து விடைபெற்றான்.

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555